

பங்கமலந்தீர் வழி அடியார் கொடிய வினையாம் பஞ்சுமலைக்கு அங்கிமலையாய் விளங்கிய சீர் அண்ணாமலை ஆலயம்.

 




(திங்களிதழ்)

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.

| மணி 1 | பரிதாபி கார்த்திகை<br>1972 நவம்பர் | ஓசை 5 |
|---|---|---|

அருளோசை அன்பர்களுக்கு, வணக்கம்

வினவிடைப் பகுதி தங்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றிருக்கிறது. இது எங்களுக்கு மன நிறைவைத் தருகிறது. இன்னும் சில அன்பர்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடாமலும் மேலும் சிலர் முடிவு தேதிக்குப்பின்னும் அனுப்புகின்றனர். இவ்வாறு அனுப்பப் பெறுபவை கண்டிப்பாக நிராகரிக்கப்படும். நவம்பர் மாத இதழுக்குரிய வினவிடையை 30-11-72க்குள் இங்கு கிடைக்கும் படி அனுப்பி வைக்க வேண்டும். இடமின்மை காரணமாக இந்த இதழில் "வள்ளுவர் காட்டிய வழியில்" என்ற கட்டுரையும், "உரைகல்" பகுதியும் இடம் பெறவில்லை, பொறுத்தாற்றிக் கொள்க.

அ. நாராயணசுவாமி,
பதிப்பாசிரியர்

## இந்த இதழில்

உ

சிவமயம்

  

# அருட்திரு. கடம்பவனேசுவரசுவாமி திருக்கோயில் கடம்பர் கோயில்

## குளித்தலை, திருச்சிமாவட்டம்



மறை கொண்ட மனத்தானை மனத்துளே
நிறை கொண்ட நெஞ்சினுள்ளூற வைம்மினோ
கறை கொண்டா னுறையுங் கடம்பந்துறை
சிறை கொண்டவ்வினை தீரத் தொழுமினே.

—திருநாவுக்கரசர்.

காவிரி என்னும் பொன்னி நதியின் தென்பாங்கர், சோலைகள் சூழ்ந்த, இயற்கை அழகுடன் அமைந்துள்ள அமைதியான திருத்தலம் கடம்பந்துறை. கங்கையைப் போன்று, அகண்ட காவேரியைப் பார்த்து வடக்கு நோக்கி அமைந்துள்ள சிவத்தலம்

அப்பர், சுந்தரர் முதலிய சமயக் குரவர்களாலும் அருணகிரி, பட்டினத்தடிகளார் முதலிய அருளாளர்களாலும் பாடல் பெற்ற பெருமை வாய்ந்தது. காலைக்கடம்பர், மத்தியானச் சொக்கர், அந்தித் திருஈங்கோய்மலை நாதர் என்ற முறை பெற்ற வரையில் முதல் வழிபாட்டுத் திருத்தலம். அருள்மிகு முற்றிலா முலையம்மையாளுடனுறையும் கடம்பப்பிரபு தன்னை வந்து வழிபடுவோர்க்கு எல்லா நலங்களையும் வழங்கி வருகின்றார்.

இத்தலத்தில் நீண்டகாலமாக நிகழ்ந்து வரும் அப்பர் உழவாரப் பணிக் குழு நல்ல பல இறைத் தொண்டு செய்து வருகின்றது. ஆலய சார்பில் அப்பர் தேவாரப் பாடசாலை சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இவ்விரண்டும் தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் இணைக்கப்பெற்ற அமைப்புகளாகும். இத்தலத்திற்கு அண்மையில், கடம்பந்துறைப் பெருமானின் அருள் பெற்று, அன்புருவாயிருந்து, அன்பர்கட்கு வேதாந்த, சித்தாந்தங்களைப் போதித் தருளிய மறைத்திரு. திருப்பதி சுவாமிகள் மடாலயம் சிறப்புற இயங்கி வருகின்றது. கண்ணையும், கருத்தையும் ஈர்த்து நலமும், அருளும் ஒருசேர நல்கும் இத்திருத்தலம் வருக, வந்து நலம் பல பெறுக என்று அழைக்கின்றோம்.

வெளியூர் அன்பர்கள் வந்து வழிபட்டுத் தங்க இலவச இடவசதியுண்டு. இச்சைவத்திருத்தலம் திருச்சி-கரூர் செல்லும் சாலையில் 25 கல் தொலைவில் உள்ளது. புகைவண்டி பேருந்து வசதிகளுண்டு.

இவ்வாறு

C. இரத்தின சபாபதி, பி.ஏ., பி.எல்.,
செயல் அலுவலர்.




*நல்வாழ்த்துக்கள் !*

சமணர்கள், உயிர் உடலின் அளவுக்கு ஏற்றவாறு சிறிது பெரிதாக அமையும் என்று கூறும் கொள்கை, அறிவுக்கு இசைந்ததாக இல்லை என்பதைச் சென்ற கடிதத்தில் ஓரளவு எடுத்துக்காட்டினோம். மேலும், உயிர்பெரிதாகவும் சிறிதாகவும் மாறுபாடடையும் என்பதை ஏற்றுக் கொண்டால் தத்துவ சிந்தனையில் பல பிழைகள் ஏற்படும். முதலாவதாகச் சிறிதாக இருக்கும் ஒரு பொருளைப் பெரிதாக்கப் புதிய சில பகுதிகளைச் சேர்க்க வேண்டும். அங்ஙனமாயின், உயிர் ஒரு பொருளா? பல பொருள்கள் சேர்ந்த கூட்டுப் பொருளா? என்ற வினா எழும். பகுதிகளாலாய ஒரு பொருள், அல்லது பலபகுதிகளை யுடைய ஒரு பொருள் நிலையானதல்ல. அது அழியக் கூடியது ஆகும். உயிர் சில பொருள்களைச் சேர்த்துக் கொண்டு பெரிய தாகவும், சில பொருள்களில் இருந்து சிறியதாகவும் மாற்றம் அடையுமானால், உயிர் நிலையான தல்ல என்று மறுக்கப் பெறும். இங்ஙனம் மறுப்பதைச் சமணர்கள் சமாதானங்கூறித் தம் கொள்கையை நிலைநாட்ட முயலுகின்றனர். அந்த முயற்சி பாராட்டுதலுக்குரியது. ஆயினும், சிக்கல் தீர்ந்த பாடில்லை.

செல்வ, சமணர்கள் காட்டும் உவமையை ஆராய்வோம். ஓர் அறையின் நடுவில் ஒளி விளக்கு. அந்த ஒளி விளக்கின் ஒளி, அந்த அறை முழுதும் பரவி ஒளி செய்கிறது. அந்த அறையின் முழு அளவையும், ஒளி எஞ்சாமல் தழுவி நிற்கிறது. ஆனால், ஒளி விளக்கில் மாற்றமில்லை. அது போலவே, உயிர் பெருத்து விடுவதில்லை—சிறுத்துவிடுவ தில்லை என்பதுதானே முறையான கருத்து. ஆனால், உயிரின் ஆற்றல் உடல் முழுவதும் பரவி உயிர்ப்பினை நல்குகிறது என்பது சமணர்கள் தரும் விளக்கம். செல்வ, இந்த உவமை

சமணர் தத்துவத்தை விளக்கச் செறிவுடையதாக இல்லை. உவமையே குறையுடையதாக இருக்கிறது. எப்படி? விளக்கு அறை முழுவதும் ஒளியைப் பரப்புவது உண்மை. ஆனால் விளக்கின் ஒளி, விளக்கின் பக்கத்தில் அதிகமாகவும், தூரம் கூடக்கூட ஒளி குறைந்தும் விளங்கும் என்பது நடைமுறை உண்மை. அப்படியானல் உடலில் உயிர் எங்குத் தங்கியிருக்கிறது? எந்த எந்த உறுப்புக்களுக்கு உயிராற்றல் மிகுதியாகக் கிடைக்கிறது? எந்த எந்த உறுப்புக்களுக்குக் குறைவாகக் கிடைக்கிறது? உயிராற்றல் குறைவாகக் கிடைக்கப் பெறும் உடலுறுப்பு வலிமையிழந்து போய்விடும் அல்லவா ?

மேலும், வைக்கப்படும் ஒளிவிளக்கின் ஒளிக்கதிர் அளவுக்கு ஏற்றவாறு அறையில் பரவும் ஒளியின் அளவு கூடவும் செய்யும்; குறையவும் செய்யும். அதுபோலவே, அறையின் அளவுக்கு ஏற்றவாறும் ஒளியில் வித்தியாசம் ஏற்படும். இங்ஙனம், உடலில் உயிராற்றல் பாய்வதில் கூடுதல் குறைவு இருக்குமாயின் வாழ்நாள் முழுவதும் நோய்ப் படுக்கையாக வல்லவா முடியும்? மேலும், உடலுக்கு உடல் மாற்றமடையும் உயிர், முத்தி நிலையில் எத்தகைய அளவைப் பெறும் என்பது விடை காண முடியாத ஒரு வினவாக நிற்கிறது.

அடுத்து, உயிர்ப் பொருள், உயிரில் பொருள் என உலகத்தை இருகூருகச் சமணம் வேறுபடுத்திக் காண்கிறது. இக்கொள்கை சமணத்துக்கு மட்டுமே உரியதன்று. வேறு சில சமயங்களைச் சார்ந்த தத்துவ ஞானிகளும் இக்கொள்கையை ஏற்றுக் கொள்வர். சமணர்கள் உயிருடைப் பொருள் (சீவன்) என்று குறிப்பிடுவதையே சாங்கியர் 'புருடன்' என்பர். சைவ சித்தாந்திகள் உயிர் (பசு) என்று கூறுவர். சமணர்கள் உயிரில் பொருள் (அசீவன்) என்று கூறுவதையே சாங்கியர் 'பிரகிருதி' என்பர். சைவசித்தாந்திகள் 'பாசம்' என்பர். ஆனல், மற்றைய தத்துவ ஞானிகளுக்கும் சமணர்க்கும் உள்ள மிகப் பெரிய வேறுபாட்டை நீ அறிந்து கொள்ள வேண்டும். அதாவது, சமணர்கள், "உயிர்ப்பொருள், உயிரில் பொருள் என்ற இரண்டே உண்டு. இவற்றிற்கப்பால் மூன்ருவதாக ஒரு பொருள் இல்லை" என்று வழக்காடுவர். ஆனல், சைவ சித்தாந்திகள் இந்த இருபொருள் தவிர, மூன்ருவது பொருளாக இறை (பதி) என்ற ஒருபொருள் உண்டென்று கூறுவர். அதுமட்டுமன்று, உயிர்ப்பொருள். உயிரில் பொருள் ஆகிய இருபொருள்களை விட 'இறை' மேலானது என்றும் அதுவே பரம்பொருள் என்றும் எடுத்துக் கூறுவர். இந்த உலகத்தின் உயிரில் பகுதியே நம்முடைய புலன்களின் அனுபவத்துக்கு எட்டுவன; வருவன. இதைப் 'புற்கலம்' என்று கூறுவது மரபு. அதாவது, பலசேர்ந்து ஒன்ருவதும், பின் பிரிந்து பல

ஆவதும் என்பதாகும். இங்ஙனம். அமைதல் இருநிலையின தாகும். ஒன்று சேர்ந்து முழுப்பருப் பொருள்களான நிலை. இந்த நிலையில்தான் ‘புற்கலங்களைப் புலன்களால் உணரவும் நுகரவும் முடியும். அதற்குச் சேர்க்கப்பட்ட பொருள் அல்லது கூட்டுப்பொருள் என்ற அர்த்தத்தில் ‘ஸ்கந்தம்’ என்ற பெயருண்டு. இந்த உலகில் நாம் கண் டு மகிழ்ந்து அனுபவிக் கும் பொருள்கள் அனைத்தும் ஸ்கந்தங்களே. சமணர், இந்த உலகத்தை ‘மகாஸ்கந்தம்’ என்று பெயரிட்டு அழைப்பர்.

அடுத்து, நம்முன் உள்ள ஒரு கேள்வி, உலகத் தோற் றத்தைப் பற்றியதாகும். இந்தப் பரந்த உலகம்' எதிலிருந்து தோன்றியது? இந்த உலகத்திற்குக் காரணமாய சடப்பொருள் கள் எதிலிருந்து தோன்றின? என்பதை அறிந்துகொள்ள வேண்டும். திருவளர் செல்வ, எப்பொழுதும் ஒன்றன் தோற்றத்தை அறிய வேண்டுமானால் அது எதில் போய் முடிகிறது என்பதைப் பார்க்க வேண்டும். எந்த ஒன்றுக்கும் முடிகிற இடம்தான் பின், தொடங்குகின்ற இடம் என்பது தத்துவ உலகத்தின் முடிவு. உதாரணமாக, ஒரு பாதை சென்று முடிகின்ற இடத்தை அது தொடங்குகின்ற இடமாக வும் கொள்ளலாம் அல்லவா? ஒழுக்கத்தின் முடிந்த இடமே பின்விரிதற்கும் காரணமாக அமையும். அந்தம் தான் ஆதியுமா கும். அதனாலன்றோ சைவசித்தாந்தம், ஊழிமுதல்வனாகி- அழித்தற் கடவுளாக விளங்கும் காலகாலனையே இவ்வுலகம் முதலாக வுடைத்து என்று கூறும். இந்த உலகில் தோன்றி யன யாவும் இறந்து படுகின்றன; அழிகின்றன. அந்த உடல் கள் மண்ணொடு மண்ணாகின்றன. ஏன்? மனித உடல்களுக் கும் கூட இதே கதிதான்! இந்த உலகத்தில் எல்லாப்பொருள் களும் இறுதியில் அழிந்து மண்ணொடு மண்ணாகவே கலக்கின் றன. இப்பொருள்களின் கூட்டிலுள்ள நீர், நெருப்பு, காற்று ஆகியவை அந்த அந்தப் பூதத்தில் ஒடுங்கும். இங்ஙனம் பொருள்கள் அழிகின்றனவே! அதன் உண்மை நிலை என்ன ? அடுத்த கடிதத்தில் ஆராய்வோம்.

இன்றக்குறிப்புகள்

கடலினும் பெரிது “வருங்கால உலகை ஆக்கும் வாய்ப்பு மாணவர்களிடம் இருக்கிற தெனில், மாணவர்களின் பொறுப்பு எத்தகைத்து என்பதை உன்னுங்கள்! மாணவர்களின் பொறுப்பு பெரிது! பெரிது !! கடலினும் பெரிது !!!”

—திரு.வி.க.

ஸ்ரீ ஏகாம்பரேசுவரர் ஸ்ரீ தண்டாயுதபாணி
சுவாமி ஆலயம், செட்டிகுளம்.

# மரம் வளர்ப்பு விழா, திருப்பணிக்குழு

—:o:—

29-10-72ல் ஸ்ரீ தெண்டாயுதபாணி சுவாமி ஆலயத்தின் சுவாமி இறங்கும் மண்டப முன் வாயிலில் 'மரம் வளர்ப்பு விழாவை' ஒட்டி மரம் நடு விழா செட்டிகுளம் உயர்நிலைப் பள்ளி தமிழாசிரியர் புலவர் சு. அழகப்பன் அவர்கள் தலைமையில் பராசக்தி எனும் வேம்பு, நடப் பெற்றது. 'மரம் வளர்ப்பு விழாவும் சித்த மருத்துவமும்' என்ற தலைப் பில் திரு. R. நாகமுத்து, திரு. R. தங்கவேல், விளக்குடி, திரு.S. துரை சாமி, திரு. கொளக்காநந்தம் குமாரவேலு ஆகியோர் சிறப்புச் சொற் பொழிவாற்றினர். மேலும் தலைவர் முதலாக 'காடு இன்றேல் நாடில்லை; சித்த மருத்துவமும் இல்லை' எனும் கருத்தை மையமாகக் கொண்டு அரியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். சி. ஈசுவரன், பி.ஏ., பி.டி., (ஆலய செயல் அலுவலர்) பேசும் போது குழந்தை பிறந்ததும் பெரிய மனிதனாக வளர்வதில்லை; அது போன்று குழந்தை நிலையில் உள்ள சின்ன பழனி எனும் இவ்வாலயம் புகழ் பெற்ற பழனி, திருப்பதி போல பெரும் புகழ் பெற அரசும், மேலதிகாரிகளும், திருப்பணிக் குழுவினரும் மெய்யன் பர்களும் பாடுபடல் வேண்டுமெனக்கூறினர். ஆலயஉதவி அலுவலர்கள் மற்றும் அஞ்சல் அதிகாரி முதலிய ஏனைய பெருமக்களுக்கும் நன்றி கூறி முடிந்ததும், அனைவருக்கும் இறைவனின் பிரசாதம் வழங்கி விழா இனிது முடிவுற்றது.

எனவே ஸ்ரீ ஏகாம்பரேசுவரர் ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி ஆலயம் திருப்பணிக் குழுவினரின் வேண்டுகோள்!

நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்!
நிதி குறைந்தவர் காசுகள், தாரீர்!!
ஆண்மையாளர் உழைப்பினை நல்கீர்!!!

இங்ஙனம்.

திருப்பணிக் குழுவினரும் செயலரும்,
பொருளாளருமான செயல் அலுவலரும்.




## திருவண்ணாமலைக் கோயில்

திரு. கே. எஸ். நரசிம்மன்., பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

முன்னுரை :

நமது அருமைத் தமிழ் நாட்டிற்குப் பெருமைதரும் எண்ணற்ற பல திருத்தலங்களுள், திருவண்ணாமலை மிகவும் தலைசிறந்ததொன்றாகும். பஞ்ச பூதத் தலங்களுள் நெருப்புத் தலம் எனவும், ஆறு ஆதாரத் தலங்களுள் மணிபூரகத் தலம் எனவும் இதனைப் பெரியோர்கள் விதந்து கூறுவர். சிவபெருமான் சோதிப் பிழம்பாய் வெளிப்பட்டு நின்ற தலம், எனச் சைவ சமய இலக்கியங்கள் இதனைப் பெரிதும் புகழ்ந்து கூறும்.

திருவண்ணாமலையை, அப்பர் சம்பந்தர் மாணிக்கவாசகர் முதலிய சைவ சமய குரவர்கள் தமது திருப்பாடல்களிற் போற்றித் துதித்துள்ளனர். திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர், இத்தலத்திலேயே தோன்றி வாழ்ந்து அருள்பெற்று விளங்கியவராவார். குகைநமச்சிவாயர், குருநமச்சிவாயர் முதலிய அருட்பெருஞ் சான்றோர்களும் இங்கு வாழ்ந்து இத்தலத்தைப் போற்றியிருக்கின்றனர். சேரர், சோழர், பாண்டியர், இராட்டிரகூடர், ஒய்சளர், துளுவர் முதலிய அரசர்கள் பலர். திருவண்ணாமலைக் கோயிலுக்குத் திருப்பணி செய்துள்ளனர். இத்தலத்தில் மொத்தம் 360 தீர்த்தங்களும், 400 இலிங்கங்களும் உள்ளன என்பர். கோயிற் பரப்பும், அமைப்பும், கோபுரச் சிறப்பும் கண்டு களிக்கத் தக்கவை.

திருவண்ணாமலைச் சிறப்பு :

திருவண்ணாமலையின் தன்னிகரற்ற பெருஞ் சிறப்பினை நம் சமயச் சான்றோர்கள் பெரிதும் வலியுறுத்தியுள்ளனர். பிறக்க முத்தி தருவது திருவாரூர்; தரிசிக்க முத்தி தருவது சிதம்பரம்; இறக்க முத்தி தருவது காசி. ஆனால் நினைத்த அளவிலேயே முத்தி தருவது திருவண்ணாமலை என்பது, நம் பண்டைப் பெரியோர்களின் நம்பிக்கை.

" துவக்கற அறிந்து பிறக்கும் ஆரூரும்
துயர்ந்திடாது அடைந்துகாண் மன்றும்,
உவப்புடன் நிலைத்து மரிக்கும்ஓர் பதியும்,
ஒக்குமோ நினைக்கும் நின் நகரை ?"

என இத்தலத்தின் சிறப்பினைத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் திறம்தெரிந்து புகழ்ந்து பாடித் துதித்துள்ளார். அவர்தாம் இயற்றிய 'சோணசைலமாலை' என்னும் சிறந்த துதிநூலில் திருவண்ணாமலையின் சிறப்புக்களை அழகுற விளக்கிப் பாடியிருக்கின்றார். "அண்ணாமலை தொழுவார் வினை வழுவா வண்ணம் அறுமே" என்று திருஞானசம்பந்தரும், "ஆடிப் பாடி அண்ணாமலை கைதொழ ஓடிப்போம் நமது உள்ள வினைகளே" என்று திருநாவுக்கரசரும் பாடியிருப்பது, திருவண்ணாமலையின் பெருமையை விளக்கும்.

கார்த்திகைத் தீபம் :

இத்துணைச் சிறப்புவாய்ந்த திருவண்ணாமலைக் கோயிலில் நிகழும் விழாக்களுள், கார்த்திகைத் தீபவிழா என்பது, நமது தமிழக விழாக்களிலேயே, தன்னிகரற்ற ஒரு பெருஞ் சிறப்பு விழாவாகத் தொன்றுதொட்டு நிலவி வருகின்றது. தமிழகத்திலுள்ள எல்லாக் கோயில்களிலுமே கார்த்திகைத் தீபவிழாக் கொண்டாடப்படுகின்றதாயினும், திருவண்ணாமலைக்கே அவ்விழா மிக்க சிறப்புரிமை உடையதாகத் திகழ்கின்றது. தமிழகத்தின் பலபாகங்களிலும் இருந்து பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் ஆண்டுதோறும் மிக்க அன்புடன் திரண்டு இவ்விழாவைத் தரிசித்து மகிழ்கின்றனர். புகழ்மிக்க இப்புனிதப் பெருவிழாவைப் பற்றிய பல சிறுசிறு குறிப்புக்கள், ஏறத்தாழ 2000 ஆண்டுகட்கு முற்பட்ட நமது பழந்தமிழ்ச் சங்க இலக்கியங்களிலும், அமைந்து காணப்படுகின்றன.

(1) திருவண்ணாமலைக் குன்றின் சிகரத்திற் கார்த்திகை மாதத்தில் ஏற்றப்படும் விளக்கானது புற இருளைமட்டுமேயன்றி, அதனைக்கண்டு வழிபடும் அன்பர்களின் அகஇருள் ஆகிய அறியாமையையும் போக்கி, மெய்யுணர்வு ஒளியை நல்கி நலம் புரிந்து விளங்குகின்றது.

(2) திருவண்ணாமலைக் குன்றின் சிகரத்திற் கார்த்திகை மாதத்தில் ஏற்றப்படும் விளக்கானது. அவரவர் இல்லங்களில் ஏற்றப்படும் சிறுசிறு விளக்குப்போல் இல்லாமல், உலகம் முழுவதற்கும் இடப்பெற்ற ஒரு பெரும் ஒளி விளக்கு எனும்படி சிறந்து திகழ்கின்றது.

(3) திருவண்ணாமலையில் கார்த்திகை மாதத்தில், முழுநிலா நாளில், மலையுச்சியின் மீது பேரொளி விளக்கு ஏற்றப்படும் இனிய காட்சியானது. எவருள்ளத்தையும் கவர்ந்து கொள்ளை கொள்ளும் மாட்சிமை உடையதாகும். மலை உச்சியில் தண்மை மிக்க முழு வெண்ணிலாத் தோன்றித் திகழ்தலும், அதனருகே செழுஞ்சுடர்ப் பேரொளி விளக்குச் சுடர்விட்டு எரிதலும் கவின் மிகுந்து, காண்பவர் உள்ளத்தைக் களி துளும்பச் செய்யும். திருவிளக்கின் ஒளிச் செழுஞ்சுடர்

செந்தாமரை மலரைப் போலவும், அதனை அடுத்து விளங்கும் முழு வெண்ணிலாவின் தோற்றம் அத்தாமரை மலரின் அருகே சென்று அணையும் அழகிய வெள்ளை அன்னம் போலவும், அமைந்து காணப்படுகின்றன.

(4) திருவண்ணாமலைக் கார்த்திகை விளக்கீடு, ஒரு கலங்கரை விளக்குப் (Light-house) போல, உயர்ந்து எரிந்து ஒளி தந்து விளங்குகின்றது. அது பிறவி ஆகிய கடலைக் கடந்து, வீடுபேறு ஆகிய கரையினை அடைய விரும்புபவர், வழி தெரியாமையால் ஏற்படும் திகைப்பு நீங்கித் தவவொழுக்கம் ஆகிய கப்பலைச் செலுத்தி உய்யும்படி செய்து உதவுகின்றது.

"பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற்
படர்பவர் திகைப்பற நோக்கித்
தவக்கலம் நடத்த உயர்ந்தெழும் சோண
சயிலனே கயிலை நாயகனே."

முடிவுரை :

இத்தகைய பல சிறப்புக்களை உடைய திருவண்ணாமலைக் கோயிலையும், அங்கு நிகழும் கார்த்திகை விளக்கீட்டு விழாவினையும், நாம் அனைவரும், அன்புடன் கண்டு வழிபட்டு, அண்ணாமலை அண்ணலின் அருளைப் பெற்று உய்ய முற்படுவோமாக.




## தமிழகத்தில் அறிவைப் பற்றிய ஆய்வு

[வித்துவான் திரு. வை. இரத்தினசபாபதி, எம்.ஏ., பி.ஓ.எல்.,]

தமிழகம் காலத்தால் மூத்த நாகரிகத்தை உடையது. எந்த ஒரு நாகரிகமும் காலத்தால் மூத்திருந்தால் மட்டும் போதாது. தென்னை மரத்தில் பழுத்த மட்டை விழுகிறது; குருத்து உண்டாகிறது. பழுத்த மட்டை விழும்போது மரத்தில் ஒரு வடுவை உண்டாக்குகிறது. வடுக்களை எண்ணினால் மரத்தினுடைய கால வளர்ச்சியை நாம் காணலாம். ஆனால் பழுத்தமட்டை உதிர்ந்து புதிய குருத்து உண்டாகும் போது, புதுமையோ அல்லது மாற்றமோ உண்டாவது இல்லை. அதுபோல நாகரிகமும் காலத்தால் மூத்ததாக இருக்கலாம். அது உயிர்ப்புடையதாக புதுமையும் மெருகும் உடையதாக முற்றி வளரும் நிலைமையை உடையதாக இருக்க வேண்டும். அத்தகைய நிலையில் முதிர்ச்சி பெற்றுவரும் நாகரிகத்தைத் தான் 'பண்பு' என்றும் பண்பாடு என்றும் இலக்கணச் சொல்லாற்கூறிப் பறை சாற்றுகிறது தமிழகம். சுருங்கக் கூறின், காலத்தை ஒட்டிய வளர்ச்சியையும் உணர்ச்சியை ஒட்டிய உயிர்ப்பையும். அறிவை ஒட்டிய செழிப்பையும் உடைய நாகரிகம் எதுவோ அதுவே பண்பு.

'பண்பு' என்ற சொல்லுக்கு இலக்கணம் கூறி, அதனை இன்னது என மக்களுக்கு அறிமுகப் படுத்துகிறது கலித்தொகை என்னும் சங்க இலக்கிய நூல். பண்பு எனப்படுவது பாடு அறிந்து ஒழுகல் என்பது அந்நூல் கூறும் இலக்கணம்.

பாடு-பெருமை. ஒருவன் தனக்குப் பெருமை தருவனவற்றை அறிதல் வேண்டும்; அறிந்தவாறு ஒழுகுதல் (நடத்தல்) வேண்டும். அறிதலும் வேண்டும் ஒழுகுதலும் வேண்டும். இரண்டில் ஒன்று மட்டும் இருந்தால் போதாது என்பதை இதன் மூலம் உணரலாம்.

எடுத்துக் காட்டாக ஒன்றைச் சிந்திக்கலாம். திருமணக்காலத்தில் ஒரு பெண்ணை அம்மி மிதித்து அருந்ததியைக் காட்டிப் பார்க்கச் சொல்லும் சடங்கு ஒன்று நிகழ்த்தப் பெறுகிறது. அச்சடங்கின் தத்துவத்தை அப்பெண் முதன் முதலில் அறிதல் வேண்டும்; அறிந்தபின் அறிந்தவாறு ஒழுகுதல் வேண்டும். தத்துவத்தை உணராமல் அப்பெண் அச்செயலைச் செய்தால் அது குருட்டுத் தனமானது; தத்துவத்தை உணர்ந்த பின்னர் அச்செயலைச் செய்யவில்லையானால் பயனில்லை. எனவே அறிதலும், அறிந்தவாறே ஒழுகுதலும் ஒத்த அளவில் தேவையானவைகளே.

அறிதலும் ஒழுகுதலும் ஒத்த அளவில் (சமபங்குடையவைகளாகவே) நம்மால் மதிக்கப்படுபவைகளே என்ருலும் தமிழகச் சான்ருேர்கள் அறிதலுக்கே முதலிடம் கொடுத்துவந்த வரலாற்றை நாம் காணலாம்.

"கற்க கசடறக் கற்பவை; கற்றபின்
நிற்க அதற்குத் தக"

என்பது திருக்குறள். இங்கே அறிதலே முதன்மைப்படுத்தி, கற்றலேக் கூறி, அதன் பின்னர் கற்றவாறு- அறிந்தவாறு ஒழுக வேண்டும் என்று கூறியுள்ளதைக் காணலாம். கலித்தொகை கூறியவாறே திருக்குறளும் கற்றலே முதன்மைப் படுத்தி—அறிதலே முதன்மைப்படுத்திக் கூறியுள்ளதை ஒப்புநோக்கிக் காணவேண்டும்.

இனி, வேறு ஒரு மரபையும் நாம் இங்கே இணைத்துக் காணுதல் வேண்டும். அறிதல் பொருளேத் தரும் வேதம் (VID-To Know.) நான்கு பிரிவுகளே உடையது. மந்திரம், பிராமணம், ஆரண்யகம், உபநிஷதம் என்ற அந்த நான்கு பிரிவுகளில் முன்னிரண்டும் செயல் முறை என்றும் பின்னிரண்டும் அறிமுறை என்றும் பிரிக்கப் பெற்றுள்ளன. அவற்றை முறையே கருமகாண்டம் ஞானகாண்டம் எனப் பெயரிட்டுக் கூறுவர். சடங்குகளேச் செய்யும்முறை முதலியவைகளே முன்னே கரும காண்டத்தில் தெரிந்த ஒருவன் அவற்றின் தத்துவத்தை ஞானகாண்டத்தில் அறிந்து தெளிவு பெறுகின்ருன். தத்துவ உலகில் கருமகாண்டமும் ஞானகாண்டமும் ஏற்படுத்திய சர்ச்சைகள் பல. கருமகாண்டமே வேதத்தின் உண்மை முடிவு. ஞானகாண்டம் கருமகாண்டத்தை வற்புறுத்த வந்தது என்று சிலரும், கருமகாண்டம் இல்லாமலேயே ஞானம் பெற முடியும் என்று சிலரும் வாதம் நிகழ்த்துவதைக் காணலாம். எவ்வாருயினும் 'வேதம்' என்பதைப் பொதுவாகக் கொள்ளுமிடத்து செயல்முறையை முன்னும் அறிதல்முறையைப் பின்னும் வைத்துக் கூறியது என்பதை யாரும் மறுக்க முடியாது.

கி.பி. பன்னிரண்டாவது நூற்ருண்டில் எழுந்த சிவஞானபோதமும் அதன் ஆசிரியராகிய மெய்கண்டாரும் தமிழக மரபுக்கு ஒப்பவே இலக்கண இயலே முன்னும் சாதன இயலேப் பின்னுமாக அமைத்துள்ளமை காணலாம். கடவுளேப் பற்றியும், உயிர்களேப் பற்றியும், இரண்டையும் சேரவொட்டாமல் தடுக்கும் தடையைப் பற்றியும் அறிந்து கொள்ள வேண்டிய பகுதிகளே முதல் ஆறு சூத்திரங்களிற் கூறி, பின்னர் உயிர்கள் தடைகளே நீக்கி, இறைவனே அடைய வேண்டிய சாதன முறையை ஏழாம் சூத்திரம் முதலாகக் கூறியருளுகிருர்.

ஆன்மீக வளர்ச்சியிலும் அறிவுக்கே முதன்மை கொடுத்து, அவ்வறிவைத் தொட்டுக் காட்டிய குருவை முதல்வனுகக் கொண்டு, அவனேயே தந்தையெனக்கருதி, அவன் அறிவித்தவாறு ஒழுகுவதை இரண்டாவதாக அமைத்துக் கொள்ளும் மரபு தமிழக மரபு எனக் கொள்ளலாம். அறிதல், ஒழுகுதல் ஆகிய இரண்டனுள்ளும் அறிதலேயே முதன்மைப் படுத்தி, ஏற்றுக்கொள்ளும் முறை சங்க காலம் முதல் இக்காலம் வரை மாருமல் அமைந்து வரும் தமிழர் மரபு என்று கொள்ள

லாம். இதற்கு மாருக, செயல் முறையை முதன்மைப்படுத்தி அறிதல் முறையைப் பின்னர் நிறுத்தி வருகிற மரபும் உண்டு. அது வேதமரபு என்பதையும் நாம் இங்கே அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

மேலே கூறிய தமிழக மரபு முறையை உலகில் நிலைநிறுத்தத் தோன்றிய அருளாசிரியர்கள் நால்வருள் முதல்வராகிய திருஞான சம்பந்தப் பெருமான், உலகமக்களுக்குப் "பெம்மான் இவன்" என்று சுட்டிக்காட்டி, அறியும் முறையை மேற்கொள்ள, அறிவால் அறிந்த அப் பெருமானைத் திருநாவுக்கரசு நாயனர், தொண்டு என்னும் துணை ஒன்றினுல் அடைய முடியும் எனச் செயல் முறையைச் செய்து காட்டும் நெறியில் நின்றதை இணைத்துக் காணவேண்டும். தமிழகச் சமய வரலாற்றில் இருவரும் ஒரே காலத்தில் இவ்வுலகில் தங்கள் தங்களின் இருவேறு வகைப்படும் செயல்களை இணைந்து நின்று செயலாற்றினுர்கள் என்பதையும் இணைத்துக் காண வேண்டும்.

அறிதலுக்கு இவ்வாறு முதன்மை கொடுத்துத் தனக்கெனத் தனி மரபு ஒன்றை வகுத்துக் கொண்ட தமிழினம் 'அறிவை'ப் பற்றிய ஆய்வுகள் பலவற்றைச் செய்து அறிவின் இலக்கணங்களாகப் பல கருத்துகளை வெளியிட்டுள்ளது. அவற்றை முறைப்படுத்தி ஆராய்வோமானுல் தமிழகம் அறிவைப் பற்றி எத்தகைய முடிவை வெளியிட்டிருக்கிறது என்பதைக் காணலாம். அறிவைப் பற்றிப் பல விளக்கங்கள் கிடைக்கின்றன. அறிவைப்பற்றி வருகின்ற விளக்கங்கள் எல்லாவற்றையும் இரண்டாகப் பிரிக்கலாம். ஒன்று: அறிவு என்ருல் என்ன? என்ற வினுவிற்கு விடையாக அமைபவை. மற்ருென்று: அறிவின் செயல்கள் யாவை? என்ற வினுவிற்கு விடையாக அமைபவை.

> "மாந்தர்க்குக் கற்றனைத்து ஊறும் அறிவு"
>
> "இனத்தியல்பதாகும் அறிவு"
>
> "மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு"

போன்றவை முதல் வகையைச் சார்ந்தவை.

> "சென்ற விடத்தாற் செலவிடாது தீது ஒரீஇ
> நன்றின் பால் உய்ப்பது அறிவு"
>
> "எண்பொருளவாகச் செலச் சொல்லித் தான் பிறர்வாய்
> நுண்பொருள் காண்பது அறிவு"

போன்றவை இரண்டாம் வகையைச் சார்ந்தவை.

இறைவனைப் பற்றி அறியும் முறையையும் செயல் முறையாகிய அடையும் முறையையும் முறையே சம்பந்தரும் அப்பரும் விளக்கினுற் போல, அறிவைப் பற்றியே அறியும் முறையையும் அடையும் முறையையும் திருவள்ளுவரும் பிறரும் எடுத்துக் காட்டி அமைத்துள்ளார்கள். 'அறிவு' என்றே முடியும் திருக்குறட்பாக்கள் பலவாக இருப்பினும் அவற்றுள்ளும் அறிவின் இலக்கணம் கூறும் குறட்பாக்களை மட்டும் பிரித்து நோக்கினுல் 'அறிவு' என்ருல் என்ன? என்னும் வினுவிற்கு விடை காணலாம். அதுவே தமிழர் கண்ட "அறிவு பற்றிய ஆய்வு" எனக் கொள்ளலாம். பின்னர் மேலை நாட்டினர் கண்ட முடிவுகளோடு தமிழகக் கருத்தையும் ஒப்பிட்டுக் கண்டு வேறுபாடு அறிதல், வேண்டுவது ஒன்ரும்.

# கல்வெட்டுக்களில் திருக்கோயில்

[திரு. கே. ஸ்ரீதரன், எம்.ஏ.,]

முன்னுரை : 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்பது சான்றோர் வாக்கு. நம் தமிழகத்தில் நமக்கு நல்வாழ்வு தரும் இறைவனுக்குக் கோயில் இல்லா ஊர் இல்லை. அவ்வாறு கோயில் இல்லாவிடில் அந்த ஊர் எவ்வாறு இருக்கும் என்பதை, அப்பர் சுவாமிகள் 'திருக்கோயில் இல்லாத திருவில் ஊர்' என உரைக்கிறார். இவ்வாறு நமக்கு நன்மை தரும் இறைவன் குடிகொண்டு இருக்கும் ஆலயங்களைப் போற்றிப் பாதுகாப்பது நம்முடைய இன்றியமையாத கடமையாகும்.

ஆலயங்கள் நாம் இறைவனை வழிபடுவதற்கு மட்டும் ஏற்படுத்திய இடமாக இல்லை என்பதை நாம் அறிவோம். தமிழ் மக்களின் நாகரிகம், பண்பாடு, சமூகவாழ்க்கை முதலியவற்றிற்குக் கோயில் எடுத்துக்காட்டாக இருக்கிறது. மேலும் சிற்பம், ஓவியம், இசை, நடனம் நாடகம் ஆகிய கலைகளுக்கு உறைவிடமாகவும் அமைந்திருந்தது.

கல்வெட்டுக்கள் ஒரு நாட்டின் தொன்மையான வரலாற்றை அறிந்து கொள்ள உதவும் முக்கியமான சான்றுகள். இக்கல்வெட்டுக்களை நாம் மிகுதியாக கோயில்களின் சுவர்கள், தூண்கள் இவற்றில் பொறிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். கல்வெட்டுக்களிலிருந்து நாம் அக்கால மக்களின் வாழ்க்கை, அவர்கள் அளித்த கொடைகள், மற்றும் பல செய்திகளை அறிந்து கொள்ளலாம். பல கல்வெட்டுக்கள் கோயிலைப் பற்றியும், கோயிலில் நடந்த திருப்பணிகள் பற்றியும், கோயிலுக்கு அளித்த கொடைகளைப்பற்றியும், கோயிலில் அலுவல்கள் எவ்வாறு நடைபெற்றன என்பது பற்றியும் செய்திகளைத் தருகின்றன. அதில் சில கல்வெட்டுச் செய்திகளிலிருந்து தொகுத்ததை மட்டும் இக்கட்டுரையில் நோக்குவோம்.

## கோயில்களின் வளர்ச்சி :

பழங்காலத்தில் கோயில்கள் மரத்தினாலும், செங்கல், சுண்ணாப்பு ஆகியவை கொண்டும் கட்டப்பெற்றன. ஆனால் அவைகள் நெடுநாள் உறுதியாக நிற்க முடியவில்லை. கடைச்சங்க காலத்திற்குப் பின் இருந்த சோழன் கோச்செங்கணான் எழுபதுக்கு மேற்பட்ட கோயில்களைக் கட்டினான். இதை திருமங்கை ஆழ்வார் தமது திருப்பதிகத்தில்,

'இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோளீசற்கு
எழில் மாடம் எழுபது செய்துலகாண்ட
திருக்குலத்து வளச் சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே'

எனப்புகழ்ந்து பாடியுள்ளார்.

மேலும் திருநாவுக்கரசர் தமது திரு அடைவுத் திருத்தாண்டகத்தில் (5ஆம் செய்யுள்) கோச்செங்கணான் கட்டிய 78 கோயில்களைக் கூறிவிட்டுக் கரக்கோயில், ஞாழற்கோயில், கொகுடிக் கோயில், இளங்கோயில், மணிக் கோயில், ஆலக்கோயில் என்ற சில கோயில்களின் கட்டிட வகைகளைக் கூறுகின்றார்.

பின்னர் வந்த பல்லவ, பாண்டிய அரசர்கள் பாறையைக் குடைந்து அழகான 'குகைக் கோயில்களை' அமைத்தனர். தென் ஆர்க்காடு மாவட்டம் விழுப்புரம் வட்டத்தில், மண்டகப்பட்டு என்னும் ஊரில் உள்ள குகைக் கோயில் கல்வெட்டு பின் வருமாறுகூறுகிறது. "செங்கல், சுண்ணும்பு, மரம், உலோகம் இன்றி, பிரம்மா, ஈசுவரன், திருமால் ஆகியோருக்கு விசித்திர சித்தன் என அழைக்கப்படும் மகேந்திரவர்ம பல்லவனல் இக்கோயில் கட்டப்பட்டது". இவ்வாறு பல்லவர்காலக் குகைக் கோயில்கள் பல சென்னைக்கு அருகில் உள்ள பல்லாவரத்திலும், திருச்சிராப்பள்ளி மலையிலும், மகேந்திரவாடி, சீயமங்கலம், மாமண்டூர், தளவானூர் ஆகிய இடங்களிலும் உள்ளன.

பாண்டிய அரசன் நெடுஞ்சடையன் பராந்தகனுடைய முதலமைச்சன் மாறன் காரி கி.பி. 770ல் ஆனைமலையில் நரசிங்கப் பெருமாள் கோயிலைக் குடைவித்து அக்கோயிலுக்கு அருகில் அந்தணர்களைக் குடியேற்றினன். அவனே முக மண்டபம் அமைத்துக் கடவுள் மங்கலமும் செய்வித்தவன் ஆவான் என ஆனைமலைக் கல்வெட்டு கூறுகின்றது.

சில மன்னர்கள், முன்பு செங்கற்களால் கட்டிய கோயில்களைக் கற்றளியாக மாற்றி அமைத்தார்கள். இச்செய்தியைப் பல கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

முதற் குலோத்துங்க சோழன் படைத்தலைவன் வாணகோவரையன் சுத்தமல்லன், உத்தமசோழனுகிய இலங்கேசுவரன் எனக் கல்வெட்டுக்களில் குறிக்கப்பெறுகிறுன். மேலப்பழுவூர் செங்கற்கோயிலைக் கற்றளியாக்கினன். இதற்கு, 'குலோத்துங்க சோழேச்சரம்' எனப்பெயரிட்டான். மேலும், அம்பலவன் பழுவூர் நக்கன் என்பவன் கோவந்தபுத்தூர் கோயிலுக்குக் கருங்கல் திருப்பணி செய்தான் என அவ்வூர்க் கல்வெட்டுக் கூறுகின்றது. (165 of 1929) இவ்வாறே சில மன்னர்கள் கருங்கல் திருப் பணிக்காகக் கொடை அளித்ததாகப் பல கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

சில மன்னர்கள் கோயிலைக் கட்டும் பொழுதே கருங்கற்களினல் கட்டினர். உதாரணமாக முதலாம் இராசராசன் தஞ்சைக் கல்வெட்டு, அவன் தஞ்சை கோயிலைக் கட்டியதைப் "பாண்டிய குலாசனி வள நாட்டுத் தஞ்சாவூர் கூற்றத்துத் தஞ்சாவூரில் நாம் எடுப்பித்த திருக்கற்றளி ஸ்ரீ ராசராசேச்சுரம்" எனத்தெரிவிக்கின்றது.

முதற் குலோத்துங்கனின் படைத்தலைவன் நரலோகவீரன் என்பவன் தில்லையில் நூற்றுக்கால் மண்டபம் அமைத்தான். தில்லைப் பெரிய திருச்சுற்று மாளிகை கட்டினன். வீதிசூழ் நல்விளக்கும் வீற்றிருக்க மண்டபம் கட்டினன். திருப்புகலூர்த் திருக்கோயிலில் உள்ள மண்டபம் ஒன்றுக்கு நரலோக மண்டபம் எனப்பெயரிட்டு அழைக்கப்பட்டு வந்தது. இச்செய்திகளைக் கல்வெட்டுக்களிலிருந்து அறிகிறோம்.

ஆலயங்களுக்கு அழகு தருவது இறைவன் குடிகொண்டு இருக்கும் விமானமும், கோபுரமும் ஆகும்.

அக்காலத்தில் மன்னர்கள் எதிரியைத் தோற்கடித்தபின் அவர்களிடமிருந்து கொண்டு வந்த பொன்னைக் கொண்டு விமானத்திற்கு பொன் வேய்ந்தார்கள். சில மன்னர்கள் அக்காரியத்திற்காக நில தானமளித்தார்கள் எனக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன்வேய்ந்தான். முதலாம் சடையவர்மன்—சுந்தரபாண்டியன் சிதம்பரம், திருவரங்கம் ஆகிய கோயில்களுக்குப் பொன்வேய்ந்ததனல் "கோயில் பொன் வேய்ந்த பெருமாள்" என அழைக்கப்பெற்ருன். நரலோக வீரன் தில்லையில் சம்பந்தர் கோயிலுக்குப் பொன்வேய்ந்தான். மூன்ரும் குலோத்துங்க சோழன் தில்லைத்திருச்சிற்றம்பலத்திற்கு எதிர் மண்டபத்தைப் பொன்வேய்ந்தான். இதை ஒரு கல்வெட்டின் மெய்க் கீர்த்தி கீழ்க் காணுமாறு கூறுகிறது :—

"எத்தரையும் தொழும் இறைவற்கு
எதிரம்பலம் செம்பொன் வேய்ந்து
சித்திரை விழா அமைத்து இறைவி
திருக்கோபுரஞ் செம்பொன் வேய்ந்து."

ஆலயங்களுக்கு அழகு தரும் கோபுரத்தையும் பல மன்னர்கள் கட்டினுர்கள், நிலமளித்தார்கள் எனக்கல்வெட்டுக்கள் கூறுகின்றன. தில்லையில், இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் மேற்கு கோபுரத்தைக் கட்டினுன். கோப்பெருஞ்சிங்கன் தெற்குக் கோபுரம் கட்டி அதன் திருப்பணிச் செலவுக்குச் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள ஆற்றூர் என்னும் ஊரை நிபந்தமாக வழங்கிஞன். இதற்குச் சொக்க சீயன் கோபுரம் எனப்பெயர்.

### கோயில் திருப்பணிகள்

கோயில் கட்டும் வேலை நிறைவு பெற்றது. அதற்குப் பழுது நேர்ந் தால் திருப்பணி செய்ய வேண்டுமே! இதற்கு என்ன செய்வது ? கோயில் திருப்பணி செய்வதின் அவசியத்தை உணர்ந்த மன்னர்கள் கோயிலுக்கு நிலதானம் செய்யும்போது கோயில் திருப்பணிக்காகவும் என்று சேர்த்தே கல்வெட்டில் பொறித்தனர். திருப்பணி எவ்வாறு செய்யவேண்டும் ?

கோயிலில் உள்ள கல்வெட்டுக்கள் தரும் செய்திகளில் பல முக்கிய மானவை. தம் முன்னேர்கள் செய்து விட்டுப் போயிருந்ததை அக்கால மன்னர்களும் உணர்ந்திருந்தார்கள். அவ்வுண்மையைக் கீழ்க்காணும் கல்வெட்டுச் செய்திகள் நமக்கு அறிவிக்கின்றன :—

திருவெண்ணெய்நல்லூர் வைகுந்தப்பெருமாள் கோயில் வடக்குத் தெற்குச் சுவரில் கோப்பெருஞ்சிங்கனின் 11-ஆம் ஆண்டுக் கல்வெட்டுச் செய்தி. அக்கோயிலில் முன்னல் இருந்த ஸ்ரீ விமானம் இடித்துப் புதுப் பிக்கப்பட்டது என்றும், அப்பொழுது முன் இருந்த ஸ்ரீ விமானத்தில் காணப்பட்ட கல்வெட்டுக்களைப் படி எடுக்கச் செய்து மறுபடியும் புதிய விமானத்தில் பொறிக்கப்பட்டது. (437 of 1921). அக்கல்வெட்டில் கூறும் "ஸ்ரீ விமானம் இழிச்சி எடுக்கிறபோது படியெடுத்தபடி" என்ற வரியால் அறிந்து கொள்ளலாம்.

தஞ்சை மாவட்டம், கும்பகோணம் வட்டம் திருக்கோடிகாவல் கோயிலைப் புதுப்பித்தவர் சோழப் பேரரசி செம்பியன் மாதேவி ஆவார். இவ்வாறு செய்யும் போது இக்கோயிலில் இருந்த கல்வெட்டுக்களைப் படி எடுத்து, வேலை முடிந்தவுடன் மறுபடியும் பொறித்துள்ளார். எவ்வாறு இது தெரிகிறது எனின் கல்வெடடுக்களின் தொடக்கத்தில் "ஸ்வஸ் திஸ்ரீ-இதுவுமொரு பழங்கற்படி" எனத்தொடங்கப்பட்டிருக்கிறது.

முதலாம் இராசராசன் 28-ஆம் ஆட்சியாண்டு திருமழபாடி கல்வெட்டுச் செய்தி—அரசன் கோயிலின் பழுதுபட்ட பழைய விமானத்தை இடிக்கவும், அவ்வாறு இடிக்கும்முன் அரசாங்க அதிகாரி பழைய விமானத்தின் சுவர்களில் உள்ள கல்வெட்டுக்களைப் புத்தகத்தில் எழுதவும் ஆணையிட்டான். அந்த ஆணை கோயில் அதிகாரிகளுக்கும் அவ்வூர்ச்சபையினருக்கும் தெரிவிக்கப்பட்டது. முதலாம் இராசேந்திரன் 14-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, அதற்குப் பின் நடந்த செய்தியைத் தொடர்ந்து கூறுகிறது. அரசன் புதிய விமானத்தில், பழைய விமானத்தில் இருந்த, புத்தகத்தில் எழுதப்பட்ட கல்வெட்டின்படிகளைப் பொறிக்கச் செய்தான். அந்த ஆணை அரசனுடைய அமைச்சனுன உத்தம சோழ பிரமராயனுல் கோயில் ஊழியருக்கும், ஸ்ரீ காரியம் செய்பவர்களுக்கும், அவ்வூர்ச் சபையினருக்கும் அருகில் உள்ள புலியூர்க் கிராமசபையினரிடமும் தெரிவிக்கப்பட்டு அவர்களின் மேற்பார்வையில் கல்வெட்டுக்கள் பொறிக்கப்பெற்றன.

ஏன் இவ்வாறு இவ்வளவு பேர்களின் மேற்பார்வையில் கல்வெட்டுக்கள் எழுதப்படவேண்டும்? அதற்கும் உதாரணம் கல்வெட்டு கூறுகின்றது. திருவிடைமருதூர்க்கோயிலில் இருக்கும் உத்தம சோழனின் 4-ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டுக் கூறும் செய்தி. திரைமூர் சபை, நகரத்தார் சபை, திருக்கோயில் உடையார் (trustees), கோயில் நிர்வாகத்தைக் கண்காணிப்போர் ஆகியோர் நாடகசாலையில் (மண்டபத்தில்) கூடி, கோயில் விளக்கு எரிப்பதற்காக நில வருவாயிலிருந்து வரும் வட்டியைப்பற்றி விசாரணை நடத்தினர். மேலும், கோயில் திருப்பணிக்கு முன் அந்த நிலங்களின் (கொடை) பற்றிய விவரணம் கோயிலின் கீழ் நிலையில் இருந்ததால், அவற்றைக் கோயில் பக்கச் சுவர்களில் பொறிக்கும் படி ஆணையிட்டான். அவ்வாறு செய்யும் பொழுது நந்தி போத்தரையன் என்பவன் அளித்த 60 கழஞ்சு பொன் தானம் விட்டுப் போயிருந்ததைக் கண்டுபிடித்து, அதை மறுபடியும் கல்வெட்டில் எழுதச் சொன்னர்கள்.

இரண்டாம் முறைவரையப் பெற்ற சாசனங்களைத் திருவிடைமருதூர், ஆடுதுறை, திருவையாறு கோயில்களில் காணலாம். கல்வெட்டின் அருமையை அக்காலத்தில் எவ்விதம் உணர்ந்திருந்தார்கள் என்பது மேற்கண்ட செய்திகளின் மூலம் அறிய முடிகிறது. எனவே இன்று நம் கோயில்களில் திருப்பணி செய்யும் பொழுது, கல்வெட்டுக்களின் மேல் வர்ணம், சுண்ணும்பு போன்றவற்றைப் பூசாமல் இருக்க வேண்டியது நமது கடமையாகும்.

தென்காசி விசுவநாதர் கோயிலின் முன் உள்ள கோபுரத்தில் உள்ள கல்வெட்டுக்களில், அரிகேசரி பராக்கிரம பாண்டியன், கோயிலுக்குத் திருப்பணி செய்ய வேண்டிய அவசியத்தையும் நம்முடைய கடமையையும் விளக்கிப் பாடலாகப் பாடியிருக்கிருன். அவை நம் மனத்தை உருக வைக்கும் முறையில் அமைந்துள்ளன.

"மனத்தால் வகுக்கவுமாட்டாத கோயில் வகுக்க முன்னின்
றெனைத்தான் பணி கொண்ட நாதன் றென் காசியை
(யென்று மண்மேல்
நினைத்தாதரஞ் செய்து தங்காவல் பூண்ட நிருதர்பதந்
தனைத்தாழ்ந் திறைஞ்சித் தரை மீதி யானுந் தரித்தனனே"

அதாவது, இக் கோயில் காசி விசுவநாதப்பெருமானின் அருளால் கட்டப்பெற்றது. எனக்குப்பின் ஆதரிக்க இருக்கிற அரசர்களின் திருவடிகளை வணங்கி, அவற்றை என் தலைமேல் தரித்துக் கொள்கிறேன்.

"ஆராயினுமிந்தத் தென்காசி மேவும் பொன்னாலயத்துள்
வாராத தோர் குற்றம் வந்தால் அப்போதங்கு வந்ததனை
*நேராக வேயொழித் துரைப் பார்களை நீதியுடன்
பாராரறியப் பணிந்தேன் பராக்கிரம பாண்டியனே."

"இக்கோயிலுக்கு ஏதாவது குற்றம் வருமானால், அதனை நீக்கி இக்கோயிலைப் போற்றிப் பாதுகாப்பவர்களை, யான் (பராக்கிரம பாண்டியன்) உலகத்தில் உள்ளவர்கள் அறியும்படி பணிந்து வணங்குகிறேன் என்று கூறுகிறான்."

---

* இவ்வடி ஓரசை குறைந்து தளைகெட்டது.

---

# "அருளோசை"

## வினா விடைப் பகுதி—அக்டோபர்-72
## பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு: திரு. சோ. கிருஷ்ணமூர்த்தி, திருச்சி–2. சந்தா எண் 1025.

இரண்டாம் பரிசு: திரு. மு. வெங்கடேசன், சென்னை-7. சந்தா எண் 617.

மூன்றும் பரிசு: செல்வி மு கிருஷ்ணகுமாரி, பூவிருந்தவல்லி. சந்தா எண் 593.

நான்காம் பரிசு: திரு. தி. கு. நவநீதம், திருச்சி–2. சந்தா எண் 93.

---




## நன்னெறிகாத்த நாதனூர்

[க. கலியாணம், எம்.ஏ., டிப்.எக்கான்.,]

"வெல்லுமா மிக வல்ல மெய்ப் பொருளுக்கடியேன்"

—சுந்தரர் திருத்தொண்டத் தொகை.

தமிழகத்தின் அக்காலப் பிரிவுகளுள் ஒன்று நடுநாடு. அதன் உட்பகுதி சேதிநாடு. அதற்குத் தலைநகர் திருக்கோவலூர். அதை ஆண்ட மன்னர் மலையமான் மரபினர். அவர்களை மலாடர் என்றும் கூறுவர். அவ்வழியில் தோன்றியவர் மெய்ப்பொருள் வேந்தர். அறநெறிவழாமல் அரசாட்சி செய்துவந்தார்; பகைவரைப் போரில் அடக்கினார்; சிவனடியார்களது திருவேடத்தையே சிவன் எனக் கருதினார்; அவர்கள் வேண்டுவன குறிப்பறிந்து குறைவறக் கொடுத்து வந்தார். இப்படி இருக்கும் காலத்தே முத்தநாதன் என்ற பகை மன்னன் இவருடன் போருக்கு வந்து பலமுறை தோற்று அவமானம் அடைந்தான். வேறு வழியால் வெல்ல சூழ்ச்சியைமேற்கொண்டான். உடம்பெல்லாம் திருநீறு பூசிக் கொண்டு சிவனடியார் வேடம் பூண்டு கையில் புத்தகப்பையில் ஒரு குறு வாளை மறைத்து வைத்துக்கொண்டு திருக்கோவலூர் அரண்மனையைச் சார்ந்தான். ஏவலர்கள் வழிவிட, பலவாயில்களையும் கடந்து கடைசி வாயிலையடைந்தான். அவ்வாயிலில் நின்ற தத்தன் என்பான் "அரசர் துயில் கொள்கிறார்; சமயந்தெரிந்தருள வேண்டும்" என்று பணிவாகச் சொல்லித்தடுத்தான். அவனையும் மீறி உள்ளே நுழைந்தான் முத்தநாதன். கட்டிலில் அரசர் துயில, பக்கத்தே அரசி அமர்ந்திருக்கக் கண்டான். அரசியார் மன்னனை எழுப்பினார். சிவனடியார் வந்தனர் என்று அரசர்கரம் கூப்பி வணங்கி "தாங்கள் எழுந்தருளியது என்ன காரியத்துக்காக?" என்று கேட்டார். "உங்கள் பெருமான் உரைத்த உலகில் எங்குமில்லாத ஆகம நூல் ஒன்றை உமக்குச் சொல்ல எடுத்து வந்துள்ளேன்" என்றான். அந்த வஞ்சக் கள்வன். "இதற்கு மேல் எனக்குப் பேறுவேறுளதோ? அடியேனுக்கு அந்த ஆகமத்தை வாசித்தருளவேண்டும்" என்றார் அரசர். "நீயும் நானும் தனியே இருக்கவேண்டும்" என்று பொய் வேடத்தவன் கூற, அரசியாரும் அகன்று அந்தப்புரம் சென்றார். முத்தநாதனை ஆதனத்து அமரச் சொல்லி அரசர் நின்று கொண்டு ஆகமத்தைச்

சொல்லும்படி வேண்டினர். அவனும் புத்தகம் அவிழ்ப்பவனைப்போல் சிறுவாளை எடுத்துத் தான் நினைத்தபடியே செய்தான். முத்தநாதன் உள் நுழைந்தது முதல் கவனமாக இருந்த தத்தன் என்ற மெய்க்காப் பாளன் உள்ளே நுழைந்து முத்தநாதனை வாள் கொண்டு வெட்ட ஓங்கினன். இரத்தம் சோர கீழே விழுகின்ற மெய்ப்பொருள் வேந்தர் "தத்தா! நமர்" என்று தடுத்து வீழ்ந்தார். "நான் இனி யாது செய்க?" என வேண்டிய தத்தனைப் பார்த்து அரசர் "இந்த அடியாருக்கு எந்த தீங்கும் நேரா வண்ணம் கொண்டுபோய் விட்டு வா" என்ருர். அரசருக்குத் தீங்கு செய்ததை அறிந்த எல்லாரும் முத்தநாதனைக் கொல்ல முற்பட்டனர். தத்தன் அரசரின் ஆணையைக் கூறியதும் அனைவரும் அகன்றனர். தத்தன் முத்தநாதனை நகருக்கு வெளியே வெகு தொலைவில் விட்டுத் திரும்பிவந்து அரசரிடம் தெரிவித்தான். "ஐயனே! நீ இன்று எனக்குச் செய்தது யார் செய்ய வல்லார்?" என்று கருணையுடன் மொழிந்தார். சூழ்ந்திருந்த அமைச்சர், மனைவி மக்கள் முதலியோரிடம் "திருநீற்று அன்பைப் பாதுகாத்து வருவீர்களாக" என்று அறிவுரை பகர்ந்து இறைவன் திருவடி நீழல் எய்தினர்.

"வெல்லுமாமிக வல்ல மெய்ப்பொருள்" நாயனர் என்ருர் சுந்தரர். நாயன்மார் வரலாறுகளிலெல்லாம் நாம் காண்பது அவர்களுக்கென ஒருகுறிக்கோளை வகுத்துக் கொண்டனர் என்பது. அதை நிறைவேற்று வதில் எவ்வித இடையூறுகள் வந்தாலும் அதைப் பொருட்படுத்துவ தில்லை. சிவனடியாரைச் சிவன் எனவே பாவித்து வந்தவர் மெய்ப் பொருள் நாயனர். முத்தநாதனைப் பகைவன் என்று கொண்டிருப்பாரா யின் அவர் தோற்றிருப்பார். அவர் கொள்கையும் தோல்வியடைந்த தாகும். எனவே தான் சுந்தரர் "வென்றவர் மெய்ப்பொருளார்" என்று அருளினர்.

நம்பியாண்டார் நம்பிகளின் திருத்தொண்டர் திருவந்தாதிப்பாடலி லும், சேக்கிழாரடிகளின் பெரிய புராணத்திலும் "தத்தா நமர்" என்ற சொற்களைக் காண்கிருேம். தஞ்சாவூர்ப் பெரிய கோயிலில் முதலாம் இரா ஜேந்திர சோழன் கல்வெட்டில் "தென்னவன் மூவேந்தவேளான் செய்வித்த செப்புப் பிரதிமங்கள் .....பாதாதிகேசாந்தம் இருபதிற்று விரல் உசரத்து இரண்டு கையுடையவரான கனமாகச் செய்த தத்தா நமரேகாண் என்றமிலாடுடையார் ஒருவர்" என்று கூறப்பட்டிருக்கிறது. இக்கல்வெட்டு சேக்கிழாருக்கு முந்தியது. சோழ நாட்டு முதலமைச்சராக இருந்தவர் கல்வெட்டுகளை எல்லாம் நன்கு ஆராய்ந்து தம் பெரிய புராணத்தை இயற்றினர் என்பதற்கு இதைவிடச் சிறந்த சான்றும் வேண்டுமோ? கல்வெட்டுச் சொற்களை அப்படியே எடுத்து ஆண்ட அவர் திறம்நோக்கி மகிழ்வோமாக.

——:():——




## திருப்பாணாழ்வார்

[வித்துவான் திரு. கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,]

"காட்டவே கண்ட பாதம் கமலநல் லாடை யுந்தி
தேட்டரு முதர பந்தந் திருமார்பு கண்டஞ் செவ்வாய்
வாட்டமில் கண்கள் மேனி முனியேறித் தனி புகுந்து
பாட்டினாற் கண்டு வாழும் பாணர்தாள் பரவினோமே."

'சோழவளநாடு சோறுடைத்து' என்ற முதுமொழிப்படி உயிர்கட்கு உணவை அளிக்கும் வயல் வளத்துக்குக் காரணமான சோழநாட்டுக் காவேரிக் கரையிலே உறையூர் என்னும் பழம்பதியொன்றுண்டு. அவ்வுறையூர் சோழர் காலம் தோன்றி இன்றுவரை பல பெருமைகளை யுடையதாய் விளங்குகின்றது. 'உறந்தை' என்னும் அவ்வுறையூரிலே கார்த்திகை மாதத்து ரோகிணி நட்சத்திரத்திலே 'குலந்தாங்கு சாதிகள் நாலிலுங்கீழிந்து' என்று சொல்லப்பட்ட இழிந்ததான பாணர் குலத்திலே திருப்பாணாழ்வார் அவதரித்தார். அவர் பிறப்பால் இழிந்த குலத்தில் தோன்றினாலும் பசுவின் பால் முதலிய சாத்துவிக உணவையே உண்டு வளர்ந்தார். உலகில் வாழும் மற்ற மனிதர்களைப் போலில்லாமல், திருமாலருளால் தோன்றியவராதலால், இயற்கையாகவே உலகப் பற்றற்று திருவரங்கன் திருத்தாளிணைகளிலேயே மனம் வைத்து பக்தி பூண்டொழுகலானார். 'குலவிச்சை கல்லாமல் பாகம்படும்' என்ற பழமொழிப்படி தாம் பிறந்த பாணர் குலத்துக்கு ஏற்ப யாழ்வாசிப்பதிலே மிகவும் தேர்ச்சிபெற்று விளங்கினார். ஆதலால் அவ்வூர் மக்களனைவரும் இவரைப் 'பாணர்' என்றே அழைக்கலாயினர்.

இத்திருப்பாணாழ்வார் அதிகாலையிலெழுந்து காவேரியில் நீராடிப் புத்தாடைபுனைந்து திருமண்காப்பிட்டுக் கொண்டு யாழும் கையுமாய் எப்பொழுதும் திருவரங்கநாதனிருக்கும் திசை நோக்கித் தொழுது, கேட்பவர் செவிகுளிரும்படி நல்லிசைபாடி வருவார். தான் இழிகுலத்தில் தோன்றிய காரணத்தால் திருவரங்கப் பெருநகரத்துக்குள் காலடி வைக்க மனமில்லாமல் தென் திருக்காவேரியின், தென்கரையிலேயே நின்றுகொண்டு யாழிசைப்பார்.

திருக்குறுங்குடியில் முன்பு நம்பாடுவான் என்னும் சாதியில் இழிந்த பஞ்சமவருணத்தவன் ஒருவன் இருந்தான். ஆனால் அந்நம்பாடுவான்

நாடோறும் யாழிசைபாடி, பகவானை அந்நாராயணனை வழிபட்டு வந்தான். அவன் தன்னுடைய பக்தியால் தன்னைச் சரணமடைந்த பிரம்மராக்கதனுடைய தீவினையைப் போக்கித் தானும் பரமபதமடைந்தான் என்று ஒரு வரலாறு உண்டு. அதுபோல் நம் திருப்பாணாழ்வாரும் குலத்தால் தாழ்ந்தவராயினும் திருவரங்கன் திருத்தாளிணைகளில் பெரும் பக்தி கொண்டு காவிரிக் கரையிலேயே மெய் மறந்து கண்களருவி சோர, நெஞ்சம் நெக்குருக, உடல் சிலிர்ப்ப யாழ் மீட்டி இனிய தமிழ்ப் பாடல்களைப்பாடி அரங்கனைத் துதித்து வரலானார்.

இவ்வாறு திருப்பாணாழ்வார் யாழிசைத்துக் கொண்டிருக்கும் பொழுது ஒருநாள் வைகறையில் திருவரங்கச் செல்வனுக்குத் திருமஞ்சனநீர் எடுத்துச் செல்ல வேண்டி, லோக சாரங்கமுனிவர் என்னும் உயர்சாதி அந்தணரொருவர் அங்கு வந்தார். தாம் வருவதையறிந்து ஒதுங்காமல் யாழிசைத்துக் கொண்டிருக்கும் பாணரைக் கண்டு மிகவும் கோபித்தார். 'எட்டிச் செல்' என்று பலமுறை கூச்சலிட்டார். திருப்பாணர் இறைபக்தியில் மூழ்கி, இவ்வுலகை மறந்து திருவரங்கனையே நினைத்திருந்தமையால் முனிவரது பேச்சுக்கள் அவர் காதில் விழவில்லை. ஆதலால் அவர் ஒதுங்கவில்லை. முனிவரும் வெகுண்டு துறையில் நீராடிக் கொண்டிருப்பவர்களைக் கூவி அழைத்தார். அவர்களில் சாதி அபிமானம் மிக்க சிலர் ஓடிவந்து, பாணரைப் பழித்தும், இழித்தும் கூறினார்கள். அந்நிலையிலும் திருப்பாணாழ்வார் சிறிதும் அசையாமல் நிற்கவே, எப்படியும் இவரைத் துரத்திட வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்ட சில சாதி வெறியர்கள் கல்லால் அடிக்கவும் முற்பட்டார்கள். ஆழ்வாருடைய நெற்றியில் கல்பட்டுக் குருதி வழிந்தது. இவ்வளவுக்கும் ஆடாமல் அசையாமல் இறைபக்தியிலீடுபட்டிருந்த ஆழ்வார் தாமாகவே கண்களைத் திறந்து பார்த்தவளவில் தம் எதிரே திருமாலடியார்கள் சூழ்ந்து நிற்கக் கண்டு அவர்களைத் தண்டனிட்டு என்ன நடந்தது என்று வினவினார். அவர்களும் நடந்ததைக் கூறினார்கள். உடனே ஆழ்வார் தம்மை மன்னிக்கும் படியும், இவ்விதம் தாம் அடியார்கள் திறத்து அபசாரப்பட்டமைக்கு மிகவும் வருந்துவதாகவும் சொல்லி ஒதுங்கி, ஒதுங்கி ஓடினார்.

இவர் அடியார்களை விட்டு ஓடி ஒதுங்கினாலும் திருவரங்கநாதனுடைய உள்ளத்தை விட்டு ஓடி ஒளிய முடியவில்லை. திருவரங்கம் பெரிய கோயிலில் பாம்பணையில் பள்ளிகொண்டிக்கும் அப்பரமன் திருவுள்ளம் மிகவும் கலங்கியது. திருப்பாணர் நெற்றியில் பட்டகல், திருவரங்கன் திருநெற்றியிலும் பட்டுக் குருதி வழிந்தது. அருகிருந்த பிராட்டியும் அதிர்ச்சியுற்றுப் பெருமானை நோக்கி நம்பக்தனான பாணன் இன்னும் புறம்பே நிற்கின்றானே. இதுதகுமோ? என்று வினவினாள். உடனே பெருமானும் 'நம்மைச் சரணடைவதற்குச் சாதி முக்கியமல்ல. பக்தி தான் முக்கியம்' என்பதை உலகத்தாருக்கு எடுத்துக்காட்டுவதற்காக, லோக சாரங்க முனிவரது கனவில் தோன்றி 'முனிவரே' நம்மிடத்தில்

எப்பொழுதும் இடையருது பக்தி செய்யும் நல்லன்பரான பாண்பெரு மாளே, நீர் இழிவாக நினையாதீர். நாளை தென்திருக் காவிரிக்கரையில் யாழிசை மீட்டும் நம் பாணனை நீர் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வாரும் என்று பணித்தார்.

முனிவரும் கண்விழித்து, என்னே அரங்கன் திருவருள், என்று கொண்டாடி அச்செய்தியை ஊரிலுள்ளார் யாவருக்கும் தெரிவித்தார். பொழுது புலர்ந்தவுடன் எல்லோரையும் அழைத்துக் கொண்டு காவிரி நீராடி, புனிதவாடையுடுத்திப் பன்னிரு திருமண்காப்புக்களையும் அணிந்து கொண்டு பாணர் நின்று பாடுமிடம் நோக்கிச் சென்றார். அவர் திருவடிகளில் விழுந்து வணங்கினர். அரங்கனுடைய கட்டளையை அப்படியே கூறினர். அது கேட்ட ஆழ்வார் மேலும் ஒதுங்கி ‘நீசனுன அடியேன் திருவரங்கத் திருநகரை மிதித்திடலாகுமோ’ என்று கூறித் தம் சாதி இழிவை நினைவு படுத்தி மறுத்துவிட்டார். அப்பொழுது முனிவர் பாணரே தாங்கள் திருவரங்கத்தை மிதிக்கவேண்டாம். அடியேன் தோள்களின் மீது அமர்ந்து கொள்ளுங்கள். திருவரங்கன் திருமுற்றத்தில் அடியேன் தங்களை இறக்கி விடுகிறேன் என்று பலமுறை வேண்டினர்.

அதுகேட்ட ஆழ்வார் நடுநடுங்கி, வாய் குழறி தாங்கள் இவ்வாறு கூறலாகுமோ? பெரும் புண்ணியங்களைச் செய்து திருவரங்கனுக்குத் தொண்டாற்றும் பேறு பெற்ற தங்கள் தோளிலா அடியேன் அமர்வது அடியார்கள் திறத்து யான் இவ்விதம் அபசாரப்படுவதைக் காட்டிலும் எரிவாய் நரகத்து வீழ்வதே நலமாகும்’ என்று மறுத்துக் கூறினர். அதற்குப்பின் முனிவரும் பாணரை நோக்கி அரங்கன் ஆணையை மீறலாகுமோ? அவன் ஆணைக்கு அடிபணிவதே அடியார் தொழில் என்று பலவாறு வேண்ட, பாணரும் கடவுள் ஆணைக்குக் கட்டுப்பட்டுக் கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்தார். பின்னர் முத்தனுனவனை, ஆதிவாகிகர் என்பவர் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு திருமாமணி மண்டபத்துக்குப் போவதுபோல லோக சாரங்கமுனிவரும் திருப்பாணாழ்வாரைத் தம் தோள்களிலே ஏற்றிக்கொண்டு திருவரங்கன் திருமுன்பே கொண்டு சேர்த்தார்.

திருப்பாணாழ்வார் கண்விழித்துப் பார்த்தவளவில் அரங்கன் கோயில் திருமுற்றத்தில் அடியார்கள் சூழத்தாம் நிற்பதை உணர்ந்தார். உடனே எல்லோரையும் தண்டனிட்டு முடிவில் அணியரங்கன் பள்ளிகொண்டிருக்கும் பாம்பணையின் கீழே திருவடிவாரத்திலே மீண்டும் தண்டனிட்டு நின்ருர். அவ்வரங்கனின் திவ்விய மங்களக் கோலத்தைத் திருவடி முதல் திருமுடிவரை கண்டு வணங்கி அனுபவித்தார். தான் கண்டு அனுபவித்த அந்த அரங்கனது அழகைத் தமக்குப் பின்பு வரக் கூடியவர்களும் அனுபவிப்பதற்காக ‘அமலனுதிபிரான்’ என்கிற திவ்வியப் பிரபந்தத்தைப் பாடியருளினர். அதன் இறுதியில்,

"கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்டவா யனென்னுள் ளங்கவர்ந் தானை
அண்டர் கோனணி யரங்க னென் னமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே"

என்று தம் கண்கள் அரங்கனைத் தவிர வேறு தெய்வங்களைக் காணா என்கிற தமது துணிவை வெளியிட்டு உலகை வாழ்வித்தருளினார்.

பெரிய பெருமாளும் திருப்பாணாழ்வாரை அத்திருமேனியோடே ஆட்கொண்டருளினார். ஆழ்வாரும் யாவரும் காணும்படி அணியரங்கன் திருவடிகளில் கலந்துவிட்டார். 'வேர் சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றா தாப்பேலே' இவ்வாழ்வார் அருளிச்செய்த அமலனாதிபிரான் என்னும் பத்துப்பாட்டும் பழமறையின் பொருளேயாகும் என்பதை வேதாந்த தேசிகருடைய திருவாக்கால் அறியலாம்.

"காண்பனவு முரைப்பனவு மற்றொன் றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடிய காதற்
பாண் பெருமா ளருள்செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று பரவு மின்கள்."

இவ்வாழ்வார் தோன்றிய கார்த்திகை ரோகிணி நாளை மணவாள மாமுனிகள் பின்வருமாறு போற்றியுள்ளார்.

கார்த்திகை யுரோகிணி நாள் காண்மினின்று காசினியீர்
வாய்த்தபுகழ்ப் பாணர் வந்துதிப்பால்--ஆத்தியர்கள்
அன்புடனே அமலனாதி பிரான் கற்றதற்பின்
நன்குடனே கொண்டாடும் நாள்.




# அம்மையப்பர்

[புலவர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,]

முன்னுரை :

சிவபெருமானது திருவுருவங்கள் பலவற்றுள் "அர்த்தநாரீசுவர மூர்த்தம்" என்பது ஒன்று. 'அர்த்தம்' என்பது பாதி. 'நாரி' என்பது பெண். சிவபெருமான் தன் உருவத்திற் பாதி ஆண் உருவமும், பாதி பெண் உருவமும் கொண்டு விளங்குகின்ருன். எனவே, சிவபெருமானுக்கு 'அர்த்தநாரீசுவரன்' என்பதும் ஒரு பெயர் ஆயிற்று. மங்கை பங்கன், மாதொரு பாகன் "மாதியலும் பாதியன்" எனவும் சிவபெருமானுக்குப் பெயர்கள் வழங்கும்.

அம்மையப்பர் :

"அர்த்தநாரீசுவரர்'' என்பதனைத் தமிழில் "அம்மையப்பர்" எனவும் வழங்கலாம். இறைவன் பெண் வடிவம் பாதியும், ஆண்வடிவம் பாதியுமாக விளங்குதல், அவனே உலகுயிர்கள் அனைத்திற்கும் தாயும் தந்தையுமாக விளங்குகின்ருன் என்னும் தத்துவத்தை உணர்த்தி நிற்கின்றது. எனவே, அப்பெருமானை "அம்மையப்பர்'' என வழங்குதல் மிகவும் பொருத்தமேயாகும். கடவுள் நம்பிக்கையும் கொள்கையும் இல்லாதவரும்கூட, உலகில் தாய் தந்தையரின் சிறப்பினையும் இன்றியமையாமையினையும் மறுத்தல் இயலாது எனவே, நம் முன்னைத் தமிழ்ச் சான்ருேர்கள் கடவுளை "அம்மையப்பர்" எனக்கொண்டு சிறப்புற வழிபட்டுப் போந்தனர்.

சங்க நூல்கள் :

உலகிற் சில மதங்கள் கடவுளை ஆணுக வைத்துப் போற்றுகின்றன. மற்றும் சில மதங்கள் கடவுளைப் பெண்ணுக வைத்துப் போற்றுகின்றன. ஆனல் தமிழர்கள் தொன்றுதொட்டே கடவுளைத் தனியே ஆணுகவோ பெண்ணுகவோ கருதாமல், இருகூறும் இயைந்த நிலையில் இனிது வழிபட்டு வருகின்றனர்.

"நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே"

என ஐங்குறுநூறு என்னும் சங்கநூல், அர்த்தநாரீசுவர மூர்த்தத்தின் அருமைப் பாட்டினை வியந்து துதிக்கின்றது.

"பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று; அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்"

எனப் புறநானூறு இதனைப் போற்றுகின்றது. இவ்வாற்றால் மிகப் பழைய காலத்திலேயே, தமிழ்ப் பெருஞ்சான்றோர்கள், இறைவன், "மாதியலும் பாதியன்" என்னும் நிலையில் விளங்கும் மாண்பினைப் போற்றி மகிழ்ந்த தன்மையினை, நாம் நன்கினிது உணரலாம்,

ஆண் பெண் அமைப்பு :

இவ்வுலகியற்கையமைப்பினை நாம் கூர்ந்து காண்போமாயின், ஓரறிவு முதல் ஆறறிவு வரையுள்ள உயிர்கள் அனைத்திலும் ஆண் பெண் பாகுபாடு அமைந்து கிடத்தலைக் காணலாம். புற்பூண்டுகளிலும், மரஞ்செடி கொடிகளிலும் ஆண் பெண் அமைப்பு தவறாமற் பொருந்தியுள்ளது. கற்களிலும்கூட, ஆண்கல் பெண்கல் முதலிய பாகுபாடுகள் இருப்பதாகச் சிற்பிகள் கூறுகின்றனர்.

இறைவன் தாயும் தந்தையும் ஆக, அம்மையும் அப்பனும் ஆக, சிவமும் சத்தியும் ஆகத், தன் திருவுருவத்திலேயே இருவேறு வகைப்பட்ட தன்மைகளைக் கொண்டு திகழ்தலினால்தான், உயிர் வடிவங்கள் அனைத்தும் குறியானும் குணத்தாலும் ஆண் பெண் என, அவ்வப் பிறவிக்குள் இருவேறு வகையாய் அடங்கித், தம்முள் கூடிக்களித்து மகிழ்ந்து வாழ்ந்து வருகின்றன. இத்தகைய உலகியல் வாழ்வுகள் அனைத்தும், சிவமும் சத்தியும் தம்முள் இயைந்து ஒன்றி நிற்கும் பெற்றியின் விளைவேயாகும்.

"ஆதியேஉலகத்தில் ஆணொடு பெண்ணுமாய் அணை காரியம்,
நாதன் நாயகியோடு கூடி நயந்த காரணம் என்பரே"

—சித்தியார்

சத்தியும் சிவமும் ஆய தன்மை, இவ் வுலகம் எல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உயர்குண குணியும் ஆக
வைத்தனன்! அவளால் வந்த ஆக்கம்இவ் வாழ்க்கை [எல்லாம்!
இத்தையும் அறியார், பீட லிங்கத்தின் இயல்பும் ஓரார்!

—சித்தியார்

தொன்மைக் கோலம் :

வலப்பக்கம் ஆண்கூறும், இடப்பக்கம் பெண்கூறுமாக அமைந்துள்ள அர்த்தநாரீசுவரம் என்னும் அம்மையப்பர் திருவுருவில், ஆண் கூறாகிய அப்பன் தோல் உடுத்தும், குழையணிந்தும், வெண்ணீறு பூசியும், சூலம் ஏந்தியும் திகழ்கின்றான். பெண் கூறாகிய அம்மை துகில் உடுத்தும், தோடு அணிந்தும், பசுஞ்சாந்து பூசியும், வளையல் அணிந்த கையில் பைங்கிளி ஏந்தியும் விளங்குகின்றாள். "ஒருமையின் இருமையும், இருமையின் ஒருமையுமாக", அர்த்தநாரீசுவர வடிவம் அதிசயமான நிலையில் அழகுற அமைந்தொளிர்கின்றது. "கந்தழி எனப்படும்

கடவுளின் இயல்பினை உண்மையாற் கண்டுணர்ந்த சான்றோர் '' என நச்சினார்க்கினியர் நயந்து புகழ்ந்து மகிழும் மாணிக்கவாசகப் பெருமான், இறைவனின் திருவுருவங்களுள் மிகவும் பழமையும் பெருமையும் மிக்க அர்த்தநாரீசுவர மூர்த்தமே "தொன்மைக்கோலம்" ஆகும் எனப் பின்வரும் திருப்பாடலில் குறிப்பிடுகின்றார் :---

''தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும்உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூ தாய் கோத்தும்பீ".

குமரகுருபரர் :

இத்தகைய அர்த்தநாரீசுவரத் திருவுருவின் சிறப்புக் குறித்துக் குமரகுருபர சுவாமிகள், தமது செந்தமிழ் இலக்கணப்புலமை நலந் தோன்றப் பின்வரும் கருத்தமையப் பாடுகின்றார்: "உலகப்பற்றை நீத்த மெய்ஞ்ஞானிகளுக்கு ஐந்தொழில் நிகழ்த்தும் தனது ஆனந்த நடனத்தைக் காட்டுதற்காக, அட்டமூர்த்தியாக விளங்கும் சிவபெருமானுக்கும் உமையம்மைக்கு உருவம் ஒன்றாகவே உள்ளது. அவ்வுருவத்தினை ஆண்பாற் கூறு பற்றி 'ஒருவன்' என்று சொல்வேனோ? அல்லது பெண்பாற் கூறுபற்றி 'ஒருத்தி' என்று சொல்வேனோ? இருபாலுள் எதுபற்றிக் குறிப்பிடினும் பிறிதொருபால் விடுபட்டே போகும். "ஒருவர் ஒன்பது உயர்இரு பாற்றாய்ப், பன்மை வினைகொளும் பாங்கிற்று என்ப" என்னும் இலக்கணச் சூத்திரம், 'ஒருவர்' என்னும் சொல் ஆண்பால் பெண்பால் என்னும் இருபாலையும் குறித்து ஏற்றபெற்றி வரும் என விளங்குகின்றது. இங்ஙனம் ஆண் பெண் ஆகிய இருபாலாரையும் ஒன்று சேர்த்துக் குறிப்பிடத்தக்க நிலையில், தமிழ் மொழியில் "ஒருவர்" என்னும் அழகிய இலக்கணச் சொல் இல்லாமற் போயிருக்குமாயின், யான் வேறு எச்சொல்லால் அத்திருவுருவத்தினைக் குறிப்பிடுதல் இயலும்?" என்று வியந்து புகழ்ந்து போற்றுகின்றார்.

''......ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன் றால்! அவ்
உருவைஇஃது ஒருத்தன் என்கோ? ஒருத்தி என்கோ ?
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றோர்
இயற்சொல் இலது எனின், யான் மற்றுஎன் சொல்
(கேனோ ?"

இவ்வாறே, மற்றோர் இடத்திலும் குமரகுருபரர் அர்த்தநாரீசுவர வடிவம் பற்றி அழகுறப் புனைந்துபாடி மகிழ்வுறுத்துகின்றார்: "செவ்வாயையும் கருங் கண்ணையும் உடைய பைந்தோகை ஆகிய உமாதேவிக்கும், சந்திரனைத் தலையில் அணிந்துள்ள சிவபெருமானுக்கும், திருவுருவம் ஒன்றாகவே உள்ளது. அவ்வுருவினை எந்தச் சொற்பொருள் கொண்டு குறிப்பிடலாம் என, ஐயுறவும், தடுமாற்றமும் ஏற்படுகின்றன. இவற்றைத் தவிர்க்கும் நிலையில் இருவருக்கும் பொருந்துமாறு பொதுப்

பட "எந்தாய்" என (எம் தந்தையே; எம்முடைய தாயே என இருவகைப் பொருளும் அமையுமாறு) நாம் பாடிவிடலாம்" எனக் கூறி, மகிழ்கின்றார் குமரகுருபரர் :

"செவ்வாய்க் கருங்கட்பைத் தோகைக்கும் வெண்மதிச் சென்னியற்கும்
ஒவ்வாத் திருவுரு ஒன்றேஉளது! அவ்வுரு வினைமற்று
எவ்வாச் சியம்என்று எடுத்திசைப்பேம்? இன்னருட் புலியூர்ப்
பைவாய்ப் பொறியரவு அல்குல் எந்தாய் என்று பாடுதுமே"

முடிவுரை :

"ஆணும் பெண்ணும் தம்முள் அயன்மை இன்றி, அன்பினால் ஒருவருக் கொருவர் ஒன்றித் தொடர்பு கொள்ளும் அரியஇனிய நெறியின் சிறப்பினை, இந்தியமக்கள் தெளிவுறத் தெரிந்திருந்த தன்மையினை, அர்த்தநாரீசுவரத் திருவுருவம் புலப்படுத்துகின்றது. "ஓர் ஆணோ பெண்ணோ தனியே இருக்கும் அளவும் நிறைவுபெறுவதில்லை. இருவரும் ஒன்று சேரும் பொழுதுதான், அவர்கள் முழு நிறைவை அடை கின்றனர். ஒருவருக்கு ஒருவர் இன்றியமையாதவராக, வாழ்க்கையில் உற்றுழியுதவிக் கொள்ளும் உயிர்த்துணைவர்களாக, ஆணும் பெண்ணும் அன்பினாற் பிரிவற ஒற்றுமைப்பட்டு உலகில் வாழ்தல் வேண்டும். கணவனும் மனைவியும் தம்முள் மிகச் சிறந்த நண்பர்களைப் போன்று திகழத்தக்கவர்கள் ஆவர். 'கணவன் மனைவி' என்னும் தொடர்பினும் சிறந்த புனிதம் மிக்க தொடர்பு பிறிதெதுவும் உலகத்தில் இல்லை. மனித வாழ்வின் விருப்பங்கள் அனைத்தும் அத்தொடர்பாற் புனிதமும் நிறைவும் பெறுகின்றன. உலக வாழ்வு என்பதே அதுதான்! இத்தகைய பற்பல சிறந்த தத்துவங்களையெல்லாம் நம்மனோர்க்கு நன்கினிது உணர்த்துவதே, அர்த்தநாரீசுவரத் திருவுருவமாகும் *. இவ்வுல கத்திற் சிறந்த கணவன் மனைவியராகத் திகழ்ந்து இல்லறத்தை நல்லற மாக ஆற்றி, வையத்துள் வாழ்வாங்கு வாழ விரும்புவோர் அனைவரும் அர்த்தநாரீசுவரப் பெருமானை வழிபட்டு உய்ய முயலுவார்களாக !

* "The image of 'ARTHA NARISWARA' is india's recognition of the mutual relationship of man and woman, the idea of the co-operative, inter-dependent, separately incomplete but mutually masculine and feminine functions.

The husband and the wife are to each other the best of friends, the essence of all relationship, the fufilment of al' desires, the very life itself. So is the husband to the wife and the wife to the husband........."

Dr. S. Radhakrishnan.






உ

சிவமயம்

## இன்பச் செல்வம்

சிவம், தொண்டை மண்டலாதீனம், காஞ்சி.

பாலினைந்தூட்டும் தாயினும் சாலப்
பரிந்து நீ பாவியேனுடைய
ஊனினை யுருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தம்ஆய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப்பிடித்தேன்
எங்கெழுந்தருளுவதினியே.

உலகிலே பெற்றவனைத் தந்தை என்றும் பெற்றவளைத் தாய் என்றும் வழங்குதல் மரபு. எல்லாவுலகையும் படைத்தும் காத்தும் அழித்தும் உயிர்க்குப் பெருநலம் அளிக்கும் மெய்ப் பெரும் பொருளைத் தந்தை தாய் என அழைத்துப் போற்றி உள்ளன்பைப் புலப்படுத்து, அருளைவளர்க்கும் உண்மை அருள்நூல் அனைத்துள்ளும் அறிகின்றோம்.

' தாதாய் மூவேழுலகுக்குந்தாயே நாயேன் றனையாண்ட
பேதாய் பிறவிப் பிணிக்கோர் மருந்தே "

'அம்மையே அப்பா ஒப்பிலா மணியே'

" தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ நம்பி யினித்தான் நல்காயே
தாயே யென்றுன்றாளடைந்தேன் தயா நீ யென்பால்
(இல்லையே"

என்பவை முதலிய திருவாசகம் பரம்பொருளைத் தாய் தந்தையாகக் கொண்டு அழைத்தல் பலரும் அறிந்ததே.

மக்கட்பிறப்பு முதலியவற்றுள் அமைந்த தாய்க்கும் கடவுளைப் பெற்றவராக் கொண்டு போற்றியவாற்றால் வழுத்தும் தாய்க்கும் வேறுபாடு கூறுவதும் நாம் அறிந்துள்ளோம்.

உலகில் தாய் தான் பெற்ற மகவைப் பாலூட்டிச் சீராட்டித் தாலாட்டுதல் முதலிய அன்பு நிகழ்ச்சியையும், கொன்றொழித்தல் முதலிய வன்பு துன்புகளையும் அறியார் இரார். "நல்ல தாய் தந்தையேவ நான் இது செயப் பெற்றேன்" எனக்கூறி இன்புற்ற பிள்ளையும், "படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ் செவிலியைத் தன் பாழ்த்தபாவிக் குடரிலே நெடுங்காலங் கிடந்தேன்" என வருந்திய (மன்னவன்) மகனும் நினைவில் எழுவர்.

தான் பெற்ற பிள்ளைக்குப் பசி தோன்றிற்று என்று நினைந்து பாலூட்டும் அன்புருவத்தாய் சான்ற பரிவுடையாள் என ஐயுருது போற்றப் பெறுவாள். அவளது பரிவு ஓர் அளவுட்பட்டதே. திருவருளாகிய தாய் உயிர், எல்லாவற்றிற்கும் அறியாமையும் சிற்றறிவும் தீர்த்துப் பேரறிவு கொடுத்துத் தானுக்கிப் பேரின்பத்தில் இடையருது திளைக்கச் செய்யும் பரிவு அளவுட்படாத பெருமை யுள்ளது, அதனல், சிவபெருமானே நீ பால் நினைந்தூட்டுந்தாயினும் சாலப் பரிந்து திரிந்த செல்வம்' என்றருளினர் அடிகள்.

புண்ணியம் (அறம், பாவம் (மறம்) செய்து அவ்விருவினையின் பயனாகிய இன்பதுன்பத்தை அடையும் உயிர்கள் அவ்விருள்சேர் இருவினையும் சேராது, பொருள் சேர் முடிவு நிலையைப் பெருமல் இறந்தும் பிறந்தும் துன்பப் பெருக்கும் இன்பத்துளியும் எய்துகின்றன. பிறப்புக்கு, இருவினையும் ஏதுவேயாயினும் பாவத்துருவாகியது உடல் எனல் பெரியோர் மரபு, "புற்புதக் குரம்பைத் துச்சில் ஒதுக்கிடம் என்ன நின்றியங்கும் இருவினைக் கூட்டைக் கல்லினும் வலிதாக்கருதினை" இருவினைப் பெட்டகம் என்று பழித்த பட்டினத்து அடிகள்,

"பாவச்சரக்கொடு பவக்கடல் புக்குக் காமக்கனலிற் காற்று (எடுத்து
அலைப்பக் கெடுவழிக் கரைசேர் கொடுமரக்கலம்"

எனவும் இழித்துப் பாடியருளினர். 'புண்ணியனைப் பூசித்த புண்ணியம்' உண்மை நிலையைச் சேர்கின்றது. பாவியேன் என்று சொல்லிக் குறைபடுவதும் புண்ணியத்தேன் என்று சொல்லிக் குறைபடுவதும் நியாயம் இருவினையும் பாவத்தை மட்டும் வெறுப்பது இயல்பு. மெய்யுணர்வுடையோர்க்கும் இருவினையினும் வெறுப்புத் தோன்றும், விருப்பு வெறுப்பு இரண்டும் அற்ற காலத்து அதுவும் இல்லை. மெய்ஞ்ஞானியரும் உடலெடுத்த பாவத்தை நினைந்து வருந்துவர். அவ்வருத்தம் அவர்க்கேயன்றி, நன்னெறி நாட்டம் உள்ள யாவர்க்கும் நன்மை பயக்கும்.

'செழுக்கமலத்திரள் அன்னநின் சேவடி சேர்ந்தமைந்த
பழுத்த மனத்தடி யாருடன் போயினர் பாவியேன் யான்

என்று தம்மைப் பாவியேன் எனச் சொல்லி வருந்துவதற்கு என்ன காரணம்?

'புழுக்கணுடைப் புன்குரம்பை' எய்தியதே காரணம். அதனை எய்தியதற்கு என்ன காரணம்? "பொல்லாக் கல்வி ஞானம் இலா அழுக்கு மனம்" காரணம். இக்கருத்திலே 'பாவியேனுடையவூன்' எனப்பட்டது, "பாவியேற்கும் உண்டாமோ......யாதும் இன்றி அறுதலே" என்றதும் அறிக. ஊனையுருக்குதல் என்ருல், வெண்ணெயை நெருப்பில் உருக்குவது போன்றது அன்று. இவ்வுண்மை புலப்படுவது அரிது.

(தொடரும்)



சீர் ஒழுகும் பதத்தாள் அருணை
உண்ணாமுலையாள்.



துங்கமிகும் தீர்த்தம் (தெப்பம்).



கொந்தாரும் மலர்ச் சோலை அருணை நெடும் கோபுரம்.



அளகை வளம்பதி தனிலும் வளம்பதி அருணை வளம்பதி.



உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்.

Edited, Printed at Peravai Achakam and Published by A. Narayanaswamy B. A.,
for the Tamil Nadu Deivika Peravai at No. 9, Maharaja Surya Rao Road,
Alwarpet, Madras-18.